நேரு குழந்தைகள் புத்தகாலயம்

# விடுமுறை வந்தாச்சு

ரவீந்திரநாத் தாகூர்

ஆங்கிலத்திலிருந்து தமிழில்
**கொ.மா.கோ. இளங்கோ**

சித்திரங்கள்
**பார்த்தா சென்குப்தா**






**நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா**

பதிக் சக்கரவர்த்தி, அந்த கிராமத்தின் சிறுவர்களுக்குத் தலைவனாக இருந்தான். ஒருநாள், அவன் மனதில் புதியதொரு குறும்புச் சிந்தனை புகுந்தது. ஆற்றங்கரையின் மணல் பகுதியில் வலுவான மரத்தின் தண்டு ஒன்று கிடந்தது. படகு தயாரிக்க அந்த மரத்தை யாரோ அங்கு வைத்திருந்தார்கள். விளையாட்டுச் சிறுவர்களுடன் சேர்ந்து அதை அங்கிருந்து உருட்டிவிட்டு நகர்த்தவேண்டும் என்ற ஒரு முடிவுக்கு வந்தான் பதிக். தான் வைத்திருந்த இடத்தில் மரத்தைக் காணாமல் அதன் உரிமையாளருக்குக் கோபம் வரும். ஆனால் இதில் நிறைய வேடிக்கையும் இருக்கும். பதிக் முன்வைத்த யோசனையை சிறுவர்கள் அனைவரும் வரவேற்றார்கள்.

மரத்தைத் தள்ளும் விளையாட்டு ஆரம்பமாகிற நேரத்தில் மக்கான் அங்கே வந்தான். பதிக்கின் தம்பிதான் மக்கான். ஒரு வார்த்தையும் பேசாமல் மரத்தின்மீது உட்கார்ந்துகொண்டான். அங்கு கூடியிருந்த சிறுவர்கள் ஒரு கணம் மக்கானைத் திகைப்புடன் பார்த்தார்கள். ஒரு சிறுவன் மக்கானை எழுந்து நகர்ந்து போகமாறு சொன்னான். ஆனால் மக்கான் அதைப் பொருட்படுத்தாமல் அமைதியாக உட்கார்ந்திருந்தான். ‘இந்த விளையாட்டால் பயன் ஏதும் உண்டா?’ என்று தீவிரமாக யோசிக்கும் ஞானியைப் போல அமர்ந்திருந்தான். மக்கானின் செய்கையை தூரத்திலிருந்து கவனித்துக்கொண்டிருந்த பதிக் உரக்கக் கத்தினான், “மக்கான்... ஒரு நிமிசத்துல அங்கிருந்து நகரலே... செமையா உதை வாங்கப்போறே!

மக்கான், இருந்த இடத்திலிருந்து நகர்ந்து மேலும் வசதியாக உட்கார்ந்துகொண்டான்.

மக்கான் தன்னை மதிக்கவில்லை என்று மற்ற சிறுவர்களுக்குப் புரிந்துவிடக்கூடாது என்றால், பதிக் தான் மிரட்டியபடி செய்து காட்டியாக வேண்டும் என்ற நிலையில் இருந்தான். ஆனால் தம்பியை விரட்டத் தேவையான தைரியம் அப்போதைக்கு அவனுக்கு இருக்கவில்லை. தம்பியை மட்டம் தட்ட இன்னும் என்ன செய்யலாம் என்று யோசித்தான். மக்கானைத் தோற்கடிப்பது மட்டும் அல்லாமல், தன்னைப் பின் தொடரும் சிறுவர்களுக்கு பொழுதுபோக்காகவும் இருப்பதாக ஏதாவது செய்ய நினைத்தான். மக்கானுடன் சேர்த்து அந்த மரக்கட்டையை உருட்டிவிடுமாறு தனது நண்பர்களுக்கு உத்தரவிட்டான் பதிக்.

மக்கான், அண்ணனின் ஆணையைக் கேட்டான். ஆனால் எழுந்து செல்ல அவனுடைய கௌரவம் இடம் தரவில்லை. அவன் உட்கார்ந்திருந்த மரத்தைவிட்டு எழவில்லை. என்னதான் நடக்கும் பார்த்துவிடுவோம் என்று இருந்தான். ஆனால், இந்த மண்ணில் புகழ் பெற நினைத்தவர்களின் பிடிவாதச் செயல்கள் எல்லாமே இறுதியில் அழிவைத்தான் தரும் என்ற உண்மை அவனுக்குப் புரியவில்லை.

அங்கிருந்த சிறுவர்கள் ஒன்றாகச் சேர்ந்து அந்த மரக் கட்டையை உருட்டத் துவங்கினார்கள். “ஒன்று... ரெண்டு... மூணூ...தள்ளு....” என்று அவர்கள் பலத்தைத் திரட்டித் தள்ளியவுடன் மரம் உருளத் துவங்கியது. அத்துடன் சேர்ந்து மக்கானின் தத்துவம், பெருமை என எல்லாமே சேர்ந்து உருண்டன.



அங்கிருந்த எல்லாச் சிறுவர்களும் சேர்ந்து உரக்கக்கத்தி ஆரவாரம் செய்து கொண்டாடினார்கள். ஆனால், பதிக் மனதுக்குள் நடுக்கம் கண்டது. அடுத்து என்ன நடக்கும் என்பது அவனுக்குத் தெரியும். அவன் நினைத்ததுபோலவே நடந்தது. நிலத்தில் குப்புறவிழுந்த மக்கான் ஆவேசத்துடன் எழுந்தான். கடுங்கோபத்தில் அண்ணனைப் பார்த்துக் கத்திக்கொண்டே ஓடி வந்தான். பதிக்கின் முகத்தை நகத்தால் கீறினான், அடித்தான். பிறகு, அழுதபடியே அங்கிருந்து வீட்டை நோக்கி ஓடினான். நாடகத்தின் முதல் பகுதி முடிவுக்கு வந்தது.

பதிக் முகத்தைத் துடைத்துக்கொண்டான். ஆற்றங்கரையில் கவிழ்ந்து கிடந்த பழைய படகின்மீது சாய்ந்து அமர்ந்தான். அருகிலிருந்த புல்லைப் பிடுங்கி வாயில்வைத்து கடித்தான். அப்போது ஒரு படகு அங்கு கரையொதுங்கியது. பழுப்புநிறத் தலைமுடியும் கருகருவென்ற மீசையும் வைத்த ஒரு நடுத்தர வயதுக்காரர் அதிலிருந்து இறங்கினார். சும்மா உட்கார்ந்திருந்த அவனைப் பார்த்து "சக்கரவர்த்தி குடும்பம் எங்கே வசிக்கிறாங்க?" என்று கேட்டார். புல்லைக் கடித்துக்கொண்டிருந்த பதிக், "அதா... அந்தப்பக்கம்" என்று அலட்சியமாகப் பதில் சொன்னான். அந்த பதிலில் எந்தப்பக்கம் என்று புரியாமல் அவர் மீண்டும் கேட்டார். பதிக், ஒரு காலைத்தூக்கி முன்னும் பின்னும் ஆட்டியபடி "நீங்களாகவே நடந்து போய் கண்டுபிடிங்க" என்றவன் மறுபடியும் புல்லைக் கடிப்பதைத் தொடர்ந்தான்.

அப்போது அங்கு வந்துசேர்ந்த வீட்டு வேலைக்காரர் ஒருவர், அம்மா அழைப்பதாக பதிக்கிடம் சொன்னார். பதிக் அசையவே இல்லை. சற்றும் தாமதிக்காத வேலைக்காரர், ஒரு பயில்வானாக மாறினார். அவனை குண்டுக் கட்டாகத் தூக்கி தோளில் போட்டுக்கொண்டு, முரண்டுபிடித்தவனின் உதைகளைப் பொருட்படுத்தாமல் வீட்டை நோக்கி நடந்தார்.

வீட்டுக்கு வந்துசேர்ந்த பதிக்கைப் பார்த்து அம்மா கோபத்துடன் கத்தினார், "நீ மக்கானை மறுபடியும் அடிச்சிருக்கே இல்லையா?"

பதிக், கோபத்துடன் பதில் பேசினான். "இல்லையே... நான் அடிக்கலே. அடிச்சதா யார் சொன்னது?"

"பதிக். பொய்பேசாதே. நீ அவனை அடிச்சிருக்கே."

"நாந்தான் இல்லைன்னு சொறேனே.... நீங்க வேணும்னா மக்கான்கிட்டயே கேட்டுப் பாருங்க."

அருகில் நின்றபடி நடப்பதைக் கவனித்துக்கொண்டிருந்த மக்கான் அம்மாவிடம் சொன்ன புகாரைத் திரும்பச் சொன்னான். "ஆமாம் அம்மா. பதிக் என்னை அடிச்சான்."

அதைக்கேட்ட பதிக் பொறுமை இழந்தான். தனக்கு இழைக்கப்பட்ட தூரோகத்தை அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. மக்கான் நின்றிருந்த இடத்துக்கு ஓடினான். “இந்தா... இதை வாங்கிக்கோ... இந்தா இன்னொண்ணு... இது பொய் சொன்னதுக்கு” என்று குத்துவிட்டபடி கத்தினான்.



அவனது அம்மா முதலில் மக்கானைப் பிடித்து தன் பக்கத்தில் இழுத்தாள். பிறகு பதிக்கை மறுபக்கத்துக்கு இழுத்து இரண்டு அடியும் கொடுத்தார். பதிக் தனது அம்மாவை உதறித் தள்ளினான். அம்மா கத்தினார். "டேய்! போக்கிரி ராஸ்கல்.... நீ உன் அம்மாவையே அடிக்கிற அளவுக்கு வந்துட்டியா?"

நெருக்கடியான இந்த சமயத்தில் வீட்டுக்குள் நுழைந்தார் ஒரு மனிதர். ஆற்றங்கரையில் பதிக்கிடம் முகவரி கேட்டாரே, அந்த பழுப்புநிற தலைமுடி வைத்திருந்த மனிதர்தான் அவர். இங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று கேட்டார். பதிக், வெட்கத்தில் தலைகுனிந்தபடி நின்றான்.

ஏற்கெனவே பரிச்சயமான குரலைக்கேட்ட அம்மா திரும்பிப் பார்த்தபோது, அவருடைய கோபம் வியப்பாக மாறியது. தனது அண்ணன் பிஷாம்பரை அடையாளம் கண்டுகொண்ட அம்மா ஆனந்தத்தில் அழத்தொடங்கினார். "அண்ணா, நீங்க எப்ப வந்தீங்க? எங்கிருந்து வர்றீங்க?" எனக் கேட்டவாறே குனிந்து அவருடைய பாதங்களைத் தொட்டு வணங்கினார்.

தங்கைக்குத் திருமணம் முடிந்த சில நாட்களிலேயே அண்ணன் பிஷாம்பர் மும்பைக்குச் சென்று விட்டார், அங்கே ஒரு வியாபாரத்தை நடத்தி வந்தார். அவர் மும்பையில் இருந்தபோது தங்கையின் கணவர் இறந்து விட்டார். பிஷாம்பர் இப்போது கல்கத்தா திரும்பி வந்திருக்கிறார். வந்ததும் தங்கையைப் பற்றி விசாரித்திருக்கிறார். தங்கை எங்கிருக்கிறாள் என்பதை உடனடியாக விசாரித்துத் தெரிந்துகொண்டு புறப்பட்டு வந்து விட்டார்.

அடுத்த சில நாட்கள் வீட்டில் மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடியது. இரண்டு பையன்களும் என்ன படிக்கிறார்கள் என்று கேட்டறிந்தார். மூத்தவன் பதிக் ஒருநாளும் அடங்குவதே இல்லை, எப்போதும் தகராறுதான். அவன் ஒரு சோம்பேறி, சொன்ன பேச்சு கேட்காதவன், முரடன் என்றார் அம்மா. ஆனால் இளையவன் மக்கான் தங்கமான பையன், அடக்கமானவன், படிப்பில் மிகவும் ஆர்வம் உள்ளவன் என்று தெரிவித்தார்.

தங்கையின் சிரமத்தைக் கேட்ட பிஷாம்பர், மூத்தவன் பதிக்கை வளர்க்கும் பொறுப்பை தான் எடுத்துக் கொள்வதாகச் சொன்னார். தன்னுடன் கல்கத்தாவுக்குக் அழைத்துச் சென்று, தனது பிள்ளைகளுடன் சேர்த்து படிக்க வைக்கப்போவதாகவும் கூறினார். கணவனை இழந்த அந்தத் தங்கை, உடனே அதற்கு ஒப்புக் கொண்டார். தன்னுடன் கல்கத்தாவுக்கு வர சம்மதமா என்று பதிக்கிடம் பிஷாம்பர் கேட்டபோது, அவன் அடைந்த உற்சாகத்துக்கு எல்லையேயில்லை. "ஓஓஓ....! வர்றேன் மாமா!" என்று தனது விருப்பதைத் தெளிவாகச் சொன்னான்.

பதிக்கின் தொல்லை ஒழியப்போகிறது என்று எண்ணியபோது அம்மாவுக்கு பெருத்த ஆறுதலாக இருந்தது. அவனைப் பற்றி அம்மாவுக்கு நல்ல எண்ணமே இருக்கவில்லை. சகோதரர்கள் இரண்டு பேருக்கும் இடையே

அன்பும் இருக்கவில்லை. பதிக் இங்கே இருந்தால் ஒருநாள் மக்கானை ஆற்றுநீரில் போட்டு அமுத்துவான் அல்லது சண்டையில் மண்டையை உடைப்பான், அல்லது மக்கானுக்கு ஏதாவதொரு ஆபத்தை ஏற்படுத்துவான். அதே சமயத்தில், தன் வீட்டை விட்டுப் போவதற்கு பதிக் ஆவலாக இருப்பதைக் கண்டு உள்ளுக்குள் சற்றே வருத்தமும் அடைந்தார்.

மாமா வந்த பிறகு ஏற்பட்ட பரபரப்பு எல்லாம் அடங்கியபிறகு, 'நாம் எப்போது கல்கத்தா புறப்படப் போகிறோம்?' என்று நாளுக்கு நாற்பது தடவை மாமாவைக் கேட்டு நச்சரித்துக்கொண்டிருந்தான் பதிக். அவன் தலைகால் புரியாமல் உற்சாகத்தில் திளைத்திருந்தான். இரவில் பாதி உறக்கத்தில் எழுந்துவிடுவான். தனது தூண்டில், பெரிய பட்டம், கோலிக் குண்டுகள் எல்லாவற்றையும் மக்கானிடம் ஒப்படைத்தான். உண்மையில் அவன் அங்கிருந்து புறப்படும்போது மக்கானிடம் காட்டிய பெருந்தன்மையை அளவிடவே முடியாது.

அவர்கள் கல்கத்தா சென்றபோது பதிக் முதன்முதலாக தன் அத்தையுடன் அறிமுகம் செய்துகொண்டான். தன் குடும்பத்தில் தேவையில்லாத மற்றொரு நபரின் புதிய வரவு அத்தைக்கு மகிழ்ச்சி தரவில்லை. தனது மூன்று மகன்களை வேறொருவரின் துணையில்லாமல் அவரே தனியாகச் சமாளிப்பதே அவருக்குப் பெரும்பாடாக இருந்தது. அதுவும் பதினான்கு வயது நிரம்பிய ஒரு கிராமத்துச் சிறுவனை சமாளிப்பது இன்னும் சிரமம். அவனை அழைத்து வருவதற்கு முன்பு பிஷாம்பர் இப்படியொரு பொறுப்பில்லாத முடிவு எடுப்பதற்கு முன்னர் ஒன்றுக்கு இரண்டு முறை யோசித்திருக்க வேண்டும்.



சிக்கலான மனித உறவுகள் நிலவும் இன்றைய உலகில் பதினான்கு வயதுச் சிறுவன் ஒருவனை வளர்ப்பதைக் காட்டிலும் தொல்லையான வேலை வேறெதுவும் இல்லை. அலங்காரச் செடிபோலவும் இருக்க மாட்டான்; பயன் தரும் மரமாகவும் இருக்க மாட்டான். ஒரு சிறுவனின் மேல் அன்பு காட்டுவதுபோல அவன் மீது அன்பு காட்ட முடியாது; எல்லா வேலைகளிலும் குறுக்கே வந்து கொண்டே இருப்பான். ஒரு சிறுவனைப்போல பேசும்போதெல்லாம் அவனை சிறு குழந்தை என்று சொல்லப்படுவான்; அவன் வளர்ந்தவனாகப் பதிலளிக்கும்போதெல்லாம் பெரியவர்களிடம் மரியாதைக் குறைவாகப்

பேசுவதாக சொல்லப்படுவான். சொல்லப்போனால், பதினான்கு வயதுச் சிறுவன் எதைப் பேசினாலும் அது அதிருப்திக்கு உள்ளாகும். அப்புறம், அவனுடைய வயது கவர்ச்சிகரமற்ற வளரும் வயது. அவனுடைய ஆடைகள் மிக விரைவாக அவனுக்குப் போதாமல் போய் விடுகின்றன. அவனது குரல் கரகரப்பாக ஒலிக்கிறது; அவனுடைய பேச்சு உடைந்த சத்தத்துடன் கேட்கிறது. திடீரென்று அவனது முகத்தின் தோற்றம் விரிகிறது, காணச் சகிக்காதது போலக்காட்சி தருகிறது. ஒரு சிறு குழந்தையின் எத்தகைய குறைகளும் மன்னிக்கப்பட்டு விடும்; ஆனால் ஒரு பதினான்கு வயது வளரிளம் பருவச் சிறுவனின் சின்னத் தவறும்கூட மன்னிக்கப்பட முடியாத குற்றமாகக் கருதப்படும். தன் நிலைமையைக் கண்டு தானே வலிமிகுந்த சுய உணர்வுக்கு உள்ளாவான். தன்னைவிடப் பெரியவர்களுடன் பேசும்போது தேவைக்கும் அதிகமாகப் பேசுகிறான்; அல்லது அளவுக்கு அதிகமாக கூச்சப்பட்டு எதையும் பேசாமல், தன் இருப்பு குறித்தே வெட்கப்படுபவனாக இருக்கிறான்.

அதே சமயத்தில், இந்த பதின்ம வயதில்தான் சிறுவர்களின் ஆழ்மனது மற்றவர்களின் அன்புக்காவும் அங்கீகாரத்துக்காகவும் ஏங்கிக்கொண்டிருக்கும். அவன் மீது அக்கறை காட்டும் எவராக இருந்தாலும் அவருக்கு கிட்டத்தட்ட அடிமையாகவே ஆகி விடுவான். ஆனால் அவன்மீது யாரும் அவ்வளவு வெளிப்படையாக அன்பினை வெளிப்படுத்த மாட்டார்கள்; ஏனென்றால், அது அளவுக்கு அதிகமான செல்லம் தருவதாக, பையனுக்கு கெடுதல் தரக்கூடியதாகக் கருதப்படும். மற்றவர்களின் திட்டும் செல்லம் கொஞ்சலுமாகச் சேர்ந்து அவன் கிட்டத்தட்ட தன் எஜமானைப் பிரிந்த நாயைப்போலவே மாறிவிடுகிறான்.

பதினான்கு வயதுடைய சிறுவனுக்கு அவனது சொந்தவீடுதான் சொர்க்கமாகத் தோன்றும். அறிமுகம் இல்லாத புதியவர்களின் வீட்டில் வசிப்பது கிட்டத்தட்ட சித்ரவதை போன்றதுதான். அவ்வீட்டுப் பெண்களின் கனிவான பார்வை அவன்மீது படுகிற நேரங்கள் பேரின்பத்தின் உச்சம், அவர்களால் புறக்கணிக்கப்படாமல் இருப்பது மகிழ்ச்சி தரும் அனுபவம்.

அத்தையின் வீட்டில் விரும்பத்தகாத விருந்தாளியாக இருப்பது பதிக்கைப் பொறுத்தவரை பெரும் வேதனை தருவதாக இருந்தது. வயதில் மூத்த அத்தையின் இளக்காரமான பார்வையும், ஒவ்வொரு தருணத்திலும் வெளிப்படுத்தும் புறக்கணிப்பும் மிகுந்த வேதனை தந்தன. அவர் எப்போதாவது ஒரு வேலை செய்யச்சொல்லும் நேரங்களில் மிகுந்த உற்சாகத்துடன் அதைச் செய்ய நினைப்பான். உற்சாகத்தில் வரம்புமீறி செயல்படுத்தி முடிக்கிறான். அப்போதெல்லாம் அத்தை அவனை முட்டாள்தனமாக நடந்து கொள்ளாதே என்றும், ஒவ்வொரு தவறையும் பாடமாக உணரவேண்டும் என்றும் புத்திமதி சொல்வார்.

தன்னைப் புறக்கணிக்கும் அத்தை வீட்டின் இறுக்கமான சூழலில் வாழ்கிற அவனுக்கு மூச்சு முட்டுவது போல உணர்ந்தான். அவன் அங்கிருந்து வெளியேறி திறந்தவெளியில் சென்று நுரையீரல் நிறைய சுத்தமான காற்றை சுதந்திரமாகச் சுவாசிக்க வேண்டும் போலத் தோன்றும். ஆனால், அவன் செல்வதற்கு அங்கே திறந்தவெளி ஏதும் இல்லை. நான்குபுறமும் நெருக்கமாகச் சூழ்ந்திருக்கும் சுவர்களாலான வீடுகளாகவே அமைந்த கல்கத்தா நகருக்கு அப்பால் தன் கிராமத்தைப் பற்றிக் கனவு காண்பான் பதிக். மீண்டும் கிராமத்துக்கே சென்றுவிட மாட்டோமா என்று ஏங்கினான். பகல் முழுவதும் பட்டம் விட்டுத் திரிந்த பசுமையான புல்வெளி; ஆடிப்பாடியும் கூச்சலிட்டுக் கொண்டும் திரிந்து மகிழ்ந்த அகன்று விரிந்த ஆற்றங்கரை; நினைத்த நேரத்தில் ஓடிப்போய் விருட்டென்று பாய்ந்து நீந்திக் குளித்து மகிழ்ந்த வாய்க்கால்; தன் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு சொன்னதைச் செய்யத் தயாராக இருந்த சக தோழர்களின் கூட்டம் எல்லாம் வரிசையாக மாறி மாறி நினைவில் நிழலாடின. எல்லாவற்றுக்கும் மேலாக, எப்போதும் தன்னைப் பற்றி தவறாகவே நினைத்திருந்த இரக்கமற்ற அம்மாவின் நினைவும் நாள் முழுவதும் அவன் மனதில் வந்து போனது.

ஒரு கன்று தன் தாய்ப்பசுவின் அண்மையை விரும்புவது போன்ற ஏக்கம், தன்னை நேசிக்கிறவரின் அணைப்புக்குள் இருக்க விரும்பும் ஏக்கம் அவனை வாட்டியது. கிடைக்காத ஒன்றைப் பற்றி விவரிக்க முடியாத ஏக்கமாக அது இருந்தது. மாலை மயங்கிய அந்திப்பொழுதில் கன்று தன் தாய்க்காக எழுப்பும் ஈனக் குரலைப் போல அம்மாவின் அன்பை வேண்டி அவனுடைய இதயத்தின் அடியாழத்தில் ஓர் அழுகை இருந்து கொண்டே இருந்தது. விலங்குகளுக்கே உரித்தானது போன்ற இந்த அன்பின் ஏக்கம் கூச்ச சுபாவமுள்ள, பதற்றத்திலேயே இருந்த, ஒல்லியான, கவர்ச்சியற்ற தோற்றம் கொண்ட அவனை அலைக்கழித்துக் கொண்டே இருந்தது. யாராலும் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை, ஆனால் அது அவன் மனதில் உளைந்து கொண்டே இருந்தது.

அவனுடைய பள்ளிக்கூடத்தில் அவனைப்போல பின்தங்கிய மாணவன் வேறுயாருமில்லை. அவனுடைய ஆசிரியர் ஏதாவது கேள்விகேட்டால் விழிப்பான், வாய் பேசாமல் மௌனமாக இருப்பான். சுமையேற்றப்பட்ட கழுதை தன் மீது விழும் அடிகளை எல்லாம் அமைதியாகப் பொறுத்துக் கொள்வதைப்போல, தன் முதுகில் விழும் அடிகளைப் பொறுத்துக் கொண்டிருப்பான். மற்ற மாணவர்கள் மைதானத்தில் விளையாடுகிறபோது அவன் ஜன்னலுக்கு அருகில் நின்றுகொண்டு தூரத்தில் தெரிந்த கட்டிடங்களின் கூரைகளைப் பார்த்துக்கொண்டிருப்பான். ஏதேனுமொரு மொட்டைமாடியின் மேல்தளத்தில் விளையாடும் சிறுவர்களைப் பார்த்துவிட்டால்போதும், அவனது மனம் ஏக்கத்தால் வேதனையில் வாடும்.

ஒரு நாள் அவன் மனதில் தைரியத்தைத் திரட்டிக்கொண்டு வந்து மாமாவைக் கேட்டான். “மாமா, நான் எப்போ வீட்டுக்குத் திரும்பப்போகலாம்?”





“விடுமுறை வருகிற வரைக்கும் பொறுத்திரு, போகலாம்” என்று பதில் சொன்னார் மாமா.

ஆனால் விடுமுறைகள் நவம்பர் மாதம்தான் வரும். அதற்கு இன்னும் பல மாதங்கள் ஆகும்.

ஒரு நாள் பதிக் தனது பாடப்புத்தகத்தைத் தொலைத்துவிட்டான். புத்தகம் இருந்தாலும் படிப்பில் சிறக்கவில்லை. இப்போது இன்னும் சிரமமாகி விட்டது. ஒவ்வொரு நாளும் இரக்கமில்லாத ஆசிரியரிடம்



பிரம்படி வாங்கினான். அவன் தமக்குச் சொந்தக்காரன் என்று சொல்ல அவனுடைய மாமாவின் பிள்ளைகளும் வெட்கப்பட்டனர். கேலி செய்வதில் மற்ற மாணவர்களுடன் அவர்களும் சேர்ந்து கொண்டனர். கடைசியாக அவன் அத்தையிடம் சென்று பாடப்புத்தகத்தை தொலைத்துவிட்டதாக முறையிட்டான்.

கோபத்தில் பல்லைக்கடித்தபடி சீறினார் அவர். “கூறுகெட்ட பட்டிக்காட்டுப் பயலே... நான் குடும்பத்தை சமாளிக்கிறதே கஷ்டமா இருக்கு. இதுல உனக்கு மாசத்துக்கு அஞ்சு தடவை புது புத்தகம் வாங்க முடியுமா...?”

அன்று மாலை பள்ளியிலிருந்து திரும்புகிற வழியில் பதிக் கடுமையான தலைவலியால் அவதிப்பட்டான். தனக்கு மலேரியாவாக இருக்குமோ என்று தோன்றியது. தலைவலி காய்ச்சலைவிட, அத்தைக்குத் தொந்தரவாக இருக்கப் போகிறோமே என்பதுதான் அவனுக்கு இன்னும் கவலையாக இருந்தது.

அடுத்தநாள் காலையில் பதிக் காணாமல் போனான். அக்கம் பக்கத்தில் தேடிப்பார்த்தும் பயனில்லை. இரவும் பகலும் கனமழை பெய்துகொண்டிருந்தது. அவனைத் தேடிச்சென்றவர்கள் முழுவதுமாக நனைந்து வீடு திரும்பினார்கள். கடைசியில், பிஷம்பார் காவல் அதிகாரிகளின் உதவியை நாடினார்.

மாலையில் ஒரு காவல்துறை வாகனம் அந்த வீட்டுக்குமுன்பு வந்து நின்றது. அப்போதும் மழையாக இருந்ததால் தெருவெல்லாம் வெள்ளப்பெருக்கு. இரண்டு காவலர்கள் சேர்ந்து பதிக்கைத் தூக்கிக்கொண்டு வந்தார்கள். தலையிலிருந்து பாதம்வரையிலும் பதிக் முழுக்க நனைந்திருந்தான். உடம்பு மொத்தமும் சேறாகியிருந்தது. ஜுரத்தால் கண்கள் சிவந்து கிடந்தன, கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. பிஷாம்பர் அவனைத் தோள்களில் தூக்கிக்கொண்டு வீட்டின் உள்ளறைக்குக் கொண்டுசென்றார். அதைப் பார்த்தவுடன் அவரது மனைவி கத்த ஆரம்பித்தார். “இந்தப் பையன் இன்னும் எத்தனை பிரச்சினைகளைக் கொண்டு வரப்போறானோ... பேசாம அவனை ஊருக்கே அனுப்பி வச்சுடறதுதான் சரின்னு புரியலையா உங்களுக்கு?”

அத்தையின் பேச்சைக்கேட்ட பதிக் தேம்பி அழுதவாறே சொன்னான். “மாமா! நான் எங்க ஊருக்குதான் போக இருந்தேன். ஆனால் இவங்கதான் என்னை மறுபடியும் இங்கே திரும்பக்கொண்டு வந்துவிட்டாங்க.”

காய்ச்சல் மேலும் அதிகமானது. இரவு முழுக்க நடுங்கிக் கொண்டிருந்தான். பிஷாம்பர் ஒரு மருத்துவரை அழைத்து வந்தார். பதிக் தனது சிவந்த கண்களைத் திறந்து மேலே விட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். “மாமா! ஏன் இன்னும் விடுமுறை வரலே? நான் வீட்டுக்குப் போகலாமா?”

பிஷாம்பர் தன் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டார். ஜுரத்தில் கொதித்துக்கொண்டிருந்த பதிக்கின் மெல்லிய கைகளை தன் கைகளில் வைத்துக்கொண்டு இரவு முழுவதும் அவனருகில் உட்கார்ந்திருந்தார்.

அவன் ஜுரத்தில் ஏதோ முனகிக் கொண்டே இருந்தான். கடைசியில் திடீரென்று அவன் கனத்த குரலில் பேசினான். “ அம்மா... என்னை நீ அடிக்காதேம்மா! நான் உண்மையாத்தான் சொல்றேன்... அடிக்காதம்மா...” என்றான்.

மறுநாள் பதிக் சற்று நேரத்திற்கு உணர்வு பெற்றான். அவனிருந்த அறைக்குள் சுற்றுமுற்றும் பார்வையை அலையவிட்டு யாரோ ஒருவரைத் தேடினான். கடைசியில் ஏமாற்றத்துடன் தலையணையில் தலை சாய்த்துக்கொண்டான். பெருமூச்சுவிட்டபடி சுவரின் பக்கம் முகத்தை திருப்பிக்கொண்டான்.

பிஷம்பர் அவனுடைய கவலையைப் புரிந்து கொண்டார். அவனது முகத்தருகில் சென்று, “பதிக்! உன் அம்மாவைக் கூட்டிட்டு வர ஆள் அனுப்பியிருக்கேன்” என்று மெதுவாகச் சொன்னார்.

ஒரு நாள் கழிந்தது. அவனைச் சோதித்த மருத்துவர் சிறுவனின் உடல்நிலை கவலைக்கிடமாக உள்ளது என்றார். பதிக் ஜுரத்தில் புலம்ப ஆரம்பித்தான்.

“இங்கே பதினெட்டடி ஆழம்... இங்கே இருபத்து நான்கு அடி ஆழம். இதோ இங்கே...” ஆற்றில் விசைப்படகை ஓட்டுபவன் ஆழம் காணும் கருவியால் ஆழத்தைக் கண்டுபிடித்து அறிவிக்கும் சம்பவம் அவன் மனதுக்குள் ஓடிக் கொண்டிருந்தது. அப்போது அவனும் ஆழம் காணமுடியாத கடலுக்குள் மூழ்கிக் கொண்டிருந்தான்.

அன்று பிற்பகலில் பதைபதைக்க ஓடிவந்த அவனுடைய அம்மா அறைக்குள் பாய்ந்து வந்தார். மகனின் கன்னத்தில் தட்டி முகத்தை இப்படியும் அப்படியுமாக அசைத்தார். உரத்த குரலில் அழத் துவங்கினார்.

பிஷாம்பர் தன் தங்கையை சமாதனப்படுத்த முயற்சித்தார். ஆனால் அம்மாவோ படுக்கையில் தலைசாய்த்து, “பதிக்! என் செல்லமே! என் செல்லமே!” என்று கதறினார்.



பதிக் ஒரு கணம் தனது அங்க அசைவுகளை நிறுத்தினான். மேலே எழுவதும் கீழே விழுவதுமாக அதுவரையிலும் அசைந்து கொண்டிருந்த கைகள் அசைவற்று நின்றன. அவன் மெலிதான குரலில் சொன்னான், “ம்ம்ம்..”

அவனுடைய நிலைமையைக் கண்டு பயந்த அம்மா மறுபடியும் அழத்தொடங்கினார்; “பதிக்! என் செல்லமே! என் செல்லமே!”

பதிக் மெதுவாகத் தலையைத் திருப்பினான். யாரையும் கண் திறந்து பார்க்காமல் மெதுவாகப் பேசினான் : “அம்மா! விடுமுறை வந்தாச்சு!”